ஸ்ரீ:

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகாய நம:

# கோதாஸ்துதி.



இது வடமொழியில் ஸ்ரீமத் வேதாந்தாசார்யஸ்வாமி

அருளிச்செய்ததை

அநுமந்தன்பட்டி

மதுரகவி ஸ்ரீநிவாஸையங்கார்

தமிழ்ச்செய்யுளாக மொழிபெயர்த்து இயற்றியது.



புதுப்பட்டிக் கிராம முன்சீப்

ஸ்ரீமான். நா. கி. வீரசிக்கு கவண்டரவர்களால்

மதுரை

ஹரிஸமய திவாகரம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1936

ஸ்ரீ:

# முகவுரை.

---

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்—நீதியார்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்"

என்று சிறப்பித்துச்சொல்லப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திவ்யதேசத்திலே பூமிப்பிராட்டியின் அம்சமாய், 'ஆழ்வார்திருமகளாராண்டாள்' என்னும்படி பெரியாழ்வாருக்குப்புத்திரியாய்க் கருவிலே திருவுடையராய், பகவத்ப்ரேமத்தாலே அவனுகப்புக்கொத்த வடிவழகுகாணவிரும்பிச் சூடிக்களைந்த தொடைமாலையின் சௌகந்தியத்திலே எம்பெருமானை ஈடுபடப்பண்ணின்காரணத்தாலே **கோதை சூடிக்கொடுத்தாள்** என்னும் திருநாமமுடைய **கோதைப்பிராட்டிவிஷயமாக,** பகவத்கண்டாவதாரரூபியாயும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராயும் ஸ்ரீமத்ராமாநுஜஸித்தாந்த ப்ரவர்த்தகராயும் கவிதார்க்கிக கேஸரியாயும் எழுந்தருளியுள்ள **ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகரா**லே வடமொழியில் அருளிச்செய்யப்பட்ட **கோதாஸ்துதி** என்னும் பிரபந்தம், ஸ்ரீஹநமத்புரவாசியாய், தமிழ்க்கவிவாணர் தலைவராய், **பதினாயிரம் பாடல்**வரை பல தமிழ்ப்பிரபந்தங்களும் புராணசரிதங்களும் பாடியுள்ள **ஸ்ரீ. உ.** வே மதுரகவி **ஸ்ரீநிவாஸையங்கார்ஸ்வாமியால்** தமிழில் மொழிபெயர்த்துச் செய்யுள்வடிவான தோத்திரப்பாமாலையாய்ப் பாடப்பட்டிருக்கிறது.

இதில் ஒவ்வொரு [illegible] முதலில் வரையப்பெற்று அததற்குரிய பொருள்களமைய வெவ்வேறு செய்யுள்வகைகளால் நான்மடியாகப் பல கவிகள் பாடப்பட்டுள்ளன. அவை சொற்பொருட்டொடைநடைநோக்கும் துறைநோக்கும் உடையனவாய்ப் படிப்பவர்க்கு இனிமைபயப்பனவாய் அமைந்துள்ளன.

இவ்வாறு ஒருபொருண்மேற் பல பாடல்களாகப் பாடியிருப்பது கற்பவர்க்குக் கவிபாடுந்திறத்தை எளிதிற் கற்பிக்கவல்லது; முதனூற்கருத்துக்களை வடமொழிபயிலாத தமிழரும் உணர்தற்கெளியது; ஒருபொருண்மேல் மூன்றடுக்கும் கலிப்பாவின் தாழிசைபோலக் கூறியதுகூறலாகாது நவல்பொருளை வலியுறுத்தற்குரியது; வைணவசமயக்கோட்பாடுகள் பலவும் அறிதற்குரியது.

இத்தகைய பிரபந்தத்தை ஆக்கியளித்த தமிழ்க்கவிவாணர் ஸ்ரீ. உ. வே மதுரகவி ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் பாடியருளிய மற்றுமுள்ள பிரபந்தங்களையும், புராணசரிதங்களையும் அச்சிட்டு வெளியிட்டால் நலமாயிருக்குமென்றும், அவர்கள் அங்ஙனம் புரியுமாறு பலரும் ஆதரவுபுரியவேண்டுமென்றும், அங்ஙனம் ஆதரிப்பது தமிழ்வளர்ச்சிக்கு உதவியாயிருக்குமென்றும் எண்ணுகிறேன்.

**திரு. நாராயணையங்கார்,**

செந்தமிழாசிரியர்.

---

ஸ்ரீ:

# இந் நூலாசிரியர் இயற்றிய வேறு நூல்கள்.

| வரிசை எண் | நூற்பெயர். | செய்யுட் டொகை | குறிப்பு |
|---|---|---|---|
| | **அச்சிற் பதிக்கப்பட்டவை.** | | |
| 1 | திருப்புத்தூர்ச் சுந்தர ஆஞ்சநேயர் பதிகம் | 12 | |
| 2 | திருவரங்கத் தத்தைவிடு தூது | | |
| 3 | திருவரங்கப்பதிகம் ... | 11 | ஆசிரியவிருத்தம் |
| 4 | திருமாலிருஞ்சோலைப் பலசந்தமாலை ... | 110 | 6 நாழிகையிற் பாடியது |
| 5 | வியூகசுந்தரராஜப்பெருமாள் சந்திரகலாமாலை .... | 17 | |
| 6 | கச்சிப்பதிகம் ... | 10 | ஆசிரியவிருத்தம் |
| 7 | வேங்கடேசப்பதிகம் ... | 12 | |
| 8 | திருக்கடிகை அந்தாதி ... | 100 | 7 நாழிகையிற் பாடியது |
| 9 | சேஷபூதரமாலை ... | 32 | |
| 10 | துரிதநிவாரணப்பதிகம் ... | 10 | |
| | **அச்சிற் பதிக்கப்படாதவை.** | | |
| 1 | அநுமோபாக்கியானம் ... | 1000 | |
| 2 | அநுமப்பதிகம் ... | 12 | ஆசிரியவிருத்தம் |
| 3 | அநுமன்மாலை ... | 102 | |
| 4 | அநுமன் அந்தாதி ... | 104 | |
| 5 | அநுமக்கலம்பகம் ... | 105 | |
| 6 | திருவரங்கநிரோஷ்டகக் கொம்பில்லாயமகவந்தாதி | 101 | |
| 7 | ஷை பதிகம் ... | 10 | |
| 8 | திருமாலிருஞ்சோலை யமக அந்தாதி ... | 103 | |
| 9 | அத்தியாளநல்லூர்மான்மியம் ... | 225 | |
| 10 | இராமாயணவெண்பா ... | 3784 | |
| 11 | கண்ணன்சரித்திரம் ... | 1234 | |
| 12 | இரகுநாததூதன் கோவை ... | 100 | நாணிக்கண்புதைத்தல் |
| 13 | கோதைவெண்பா ... | 220 | |

| | | | |
|---|---|---|---|
| 14 | திருமோகூர்ச் சந்திரகலாமாலை... | 17 | |
| 15 | ஸ்ரீவேங்கடேசன் சந்திரகலாமாலை ... | 17 | |
| 16 | திருப்புகழ் ... | 401 | |
| 17 | திருக்கூடற்றிரிபந்தாதி ... | 105 | |
| 18 | நூற்றெட்டுத் திருப்பதிச் சிலேடை வெண்பா ... | 110 | |
| 19 | தேர்வண்டிக்காற்சரித்திரம் ... | 410 | |
| 20 | நாரதீயபுராணம் முற்பகுதி ... | 1200 | |
| 21 | கிருஷ்ணகர்ணாமிர்தம் ... | 105 | |
| 22 | வாக்குண்டாமாலை ... | 103 | |
| 23 | நக்ஷத்திரமாலை ... | 29 | |
| 24 | இராசிமாலை .... | 13 | |
| 25 | நவக்கிரகமாலை ... | 10 | |
| 26 | உற்பவமாலை ... | 10 | |
| 27 | ஊர்ப்பத்து ... | 10 | |
| 28 | தோத்திரப்பத்து ... | 10 | |
| 29 | வேங்கடேசன்பலசந்தமாலை ... | 30 | |
| 30 | அலங்காரகிருஷ்ணன்பதிகம் ... | 11 | |
| 31 | தினசரிவாழ்வு ... | 200 | |
| 32 | பாதுகாசகஸ்ரம் பிற்பகுதி ... | 499 | வடமொழியிலிருந்து மொழிபெயர்த்தது |

ஸ்ரீ:

# கோதாஸ்துதி.

## காப்பு.

### திருப்புளியாழ்வார்.

சூழ்சாகை மன்னிக் துளிர்பேறிய தொன்மரத்தின்
வீழாயி ரங்கண் மிளிர்ந்தாங்குயர் வேதநின்று
தாழா திணைந்த தமிழாயிரந் தந்தவள்ளல்
வாழ்நாழ்மை யில்லா மரமேயரம் வல்வினைக்கே. (1)

குறிப்பு:-சாகை-கிளை. தொன்மரம்-ஆலமரம். வீழ்-விழுது. தமிழாயிரம்-திருவாய்மொழி. நாழ்மை-குற்றம். மரம்-திருப்புளியாழ்வார்.

### பெரியாழ்வார்.

திருப்பாவை முப்பதஞ் செப்பினாள் செம்பொன்
உருப்பாவை யொண்புகழை யோத—விருப்பாரும்
இட்டர்பிரான் வேல்வழுதி யெங்கள்பிரா னென்றேத்தும்
பட்டர்பிரான் றாளிணையே பற்று. (2)

திருப்பாவை - முப்பது பாசுரமுடையதாக ஆண்டாள் அருளிச்செய்ததொரு பிரபந்தம். வழுதி - பாண்டியன். பட்டர்பிரான் - பெரியாழ்வார்.

### ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்.

தீண்டாத வேதந் தமிழ்மாமறை தன்பொருளுட்
கொண்டான் மராடித் தசநூறருள் கொண்டுரைத்தோன்
வண்டார் பொழில்சூழ் வடவேங்கட மன்னுபைம்பொற்
கண்டாவ தார னிருதாண்மலர் கைகுவிப்பாம். (3)

மராடி-மரவடி; பாதுகை. தசநூறு-ஆயிரம். மராடித் தசநூறு-பாதுகாஸஹஸ்ரம் என்கிற தோத்திரப்பிரபந்தம். கண்டாவதாரன்-ஸ்ரீ வேதாந்ததேசிகன்.

## குருவணக்கம்.

வேயர் குலம்விளங்க மேவுந் திருக்கோதை
நாயகிதன் ஸ்ரோத்திரப்பா நான்பாடத்—தூயபுகழ்
**நங்குரவன் நல்வீர ராகவனு** நான்மறையா
றங்க முணர்ந்தோ னரன். (4)

## சிறியதிருவடி.

கஞ்சனைக் கரிய நீல கண்டனைக் கடுக்குங் காட்சி
மஞ்சனை யிராமன் பாத மலரிணை மறவா தேத்து
நெஞ்சனை நிகரி லாத நெடும்பணைத் தோளி னை
யஞ்சனை குமர னை வனுமனை யகத்துள் வைப்பாம். (5)

**கஞ்சன்**—பிரமன். நீலகண்டன்—சிவன். கடுத்தல்—ஒத்தல்.

## அவையடக்கம்.

இருமொழிக் கெல்லை கண்டோ னெவற்றினும் வலிய னெம்மான்
திருவருள் பெறும்**வே தாந்த தேசிக** னருளிச் செய்த
மருவளர் கூந்தற் **கோதா மான்மிய** மால்கொண் டுள்ளம்
வருதமிழ்க் கவியாற் சொல்ல வல்லனோ மதியி லேனே. (6)

உணர்வின்முற் பவத்தி னுற்று முறுபவப் பிணியான் மாழ்கி
யணையினிற் கிடக்கை மேவி யரும்பெறற் கோதை யன்னை
துணைவரு மிம்மை யம்மை யாமெனத் துணிந்து சொற்ற
மணியன தமிழ்ப்பா மாலை வழுவென மதித்தி டாரே. (7)

எழுபான்மூன் றாண்டி னிரும்பிணிவாய்ப் பட்டே
இழுமெ னணைமே லிருந்தே—யழகான
**கோதாத் துதி**யிதனைக் கூறினேன் கூறுபவோர்
கோதாப் புலவர் குழாம். (8)

---

ஸ்ரீ:

# கோதாஸ்துதி.

ஸ்ரீவிஷ்ணுசித்தகுலநந்தநகல்பவல்லீம்
ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தநயோகத்ருஶ்யாம் ।
ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்
கோதாமநந்யஶரணஶ்ஶரணம் ப்ரபத்யே ॥ க ॥

1 சீருலவும் விண்டுசித்த னென்னும் வேயர்
திருக்குலமா நந்தவனந் திகழ்பூங் கற்ப
தாருவளர் கொடியாகி யரங்க நாத
சாமியரி சந்தனத்திற் சார்த லானல்
ஏருலவிப் பொறுமையினிற் பூமா தாகி
யினியவரு ளதனின்மற் றோர் திருவு மான
தாருலவுங் கோதைதனை யன்றி மற்றோர்
சரணறியேன் சரணடைந்து தரிசித் தேனே. (க)

2 குருவரங்கொள் பட்டர்பிரான் குலமெனுநந் தனத்தருவின்
கொடியா யென்றுந்
திருவரங்கத் தனியரசி னருகுறையுங் குணமணியைச்
செவ்வி வாய்ந்த
வுருவதனிற் பூமகளைப் பொறுமையினிற் புவிமகளை
யொப்பாள் தன்னை
மருவளரும் குழலாளைக் கோதைதனைச் சரணாக
வணங்கி வாழ்வாம். (உ)

3 பட்டர்பிரான் குலமென்னும் பசுங்காவின் றருக்கொடியாய்
இட்டமுறுந் திருவரங்க ரிடத்துறையுங் குணமணியாய்க்
கட்டழகிற் பொறுமையினிற் கமலையொடு மண்மகளாய்
மட்டவிழுங் குழலாளைச் சரணாக வணங்கிடுவாம். (ங)

4 குருவா கியபட்டர் கோன்குல மான கொழும்பொழிலின்
றருவேறும் பூங்கொடி தானா யரங்கர் தமக்குகந்த
மருவாய்ப் பொறையினின் மண்மக ளாகி வனப்பினுயர்
திருவான கோதை தனைச்சரணாகதி செய்தனனே. (ச)

5 பட்டர்பிரா னென்னும் படிப்பையருங் கற்பகத்தின்
இட்டு வளர்கொடியா யிந்திரையாய்க்—கட்டழகின்
மண்டலமாய் வண்பொறையின் மாலுக்கே மாலளிக்குந்
தண்டமிழ்செய் கோதாய் சரண். (௫)

படப்பை—சோலை.

वैदेशिकः श्रुतिगिरामपि भूयसीनां
वर्णेषु माति महिमा न हि मादृशां ते ।
इत्थं विदन्तमपि मां सहसैव गोदे
मौनद्रुहो मुखरयन्ति गुणास्त्वदीयाः ॥ ॥ ௨ ॥

6 மணியறுகான் முரல்பசுந்தண் காவு சூழ்ந்த
மல்லிநா டாளுமொரு மணியே யுன்றன்
றணிவறுசீ ரெடுத்தோதற் கூமனாகுந்
தமியேற்குன் கடைக்கணருள் சார்ந்தன்றோபல்
அணியழகு தருமோனை யெதுகை தன்மை
யமுதமெனுஞ் சுவையினிமை யான வோசை
பணிமருவ விசைமருவும் பாடல் பாடும்
பாக்கியம்பெற் றனனூன்றிப் பார்க்குங் காலே. (௧)

7 காமரு பனுவன் மாலைக் கற்பக மனைய கோதாய்
மாமறை வழுத்து நின்சீர் மான்மிய மனைத்து மோதற்
கூமனாய் நின்ற வென்னை யுன்னருட் குணங்க ளன்றோ
பூமிசைப் புலவர் போற்றப் புகன்றிடப் புரிந்த வன்றே. (௨)

8 நல்லார் புகழ்தரு நான்மறை யாலு நவிற்றருஞ்சீ
ரெல்லா மிசைத்தற் கொருமூகை யாகி யிருந்தவெனைப்
பல்லார் புகழும் படிபாடச் செய்ததுன் பார்வையன்றோ
செல்லார் பொழிற்றிரு வில்லிபுத் தூர்வந்த செந்திருவே. (௩)

மூகை—ஊமை.

9 கோதற்ற செந்தமிழ்தேர் கோதாயுன் சீரனைத்தும்
ஓதற்கு மூங்கையனா யுற்றவெனைச்—சீதத்
தொடைக்கவிதை பாடச் சுரந்ததுநின் செய்ய
கடைக்கணரு ளேக்கன்றோ காண். (௪)

மூங்கை—ஊமை,

10 கோதை நின்புகழ் கூறுமா
றேதி லூமனி னெய்தெனைத்
தீதி லாவருள் செய்ததுன்
காத லாவிய கண்களே. (௫)

த்வத்ப்ரேயஸ: ச்ரவணயோரம்ருதாயமாநாம்
துல்யாம் த்வதீயமணிநூபுரஶிஞ்ஜிதாநாம் ।
கோதே த்வமேவ ஜநநி த்வதபிஷ்டவார்ஹாம்
வாசம் ப்ரஸந்நமதுராம் மம ஸம்விதேஹி ॥ ॥ ௩ ॥

11 மென்னடைய செந்நிறக்கா லன்னம் பாடி
விளையாடும் புனற்றுறைக்கா வேரி சூழ
மன்னரங்கன் செவிக்கமுத மழையே போல
மதுரமுற வொலித்திடுநின் மலர்த்தாள் வேய்ந்த
நன்னரெழிற் சிலம்பின்மணி நாத மென்ன
நலனழகு கெம்பீர நடைகண் மேவி
வன்னமுறு நினதுதிக் கேற்ற தாய
வாக்கருள்பூங் கோதையெனு மயிலன் னளே. (௧)

12 திருவரங் கேச னார்தஞ் செவிக்கமு தான வோசை
மருவுநின் மலர்த்தா ளம்பொன் மணிச்சிலம் பாங்கு வன்னந்
தருமெழின் மதுரந் தண்மை சார்ந்துநின் றகைமைக் கேற்ற
வருணணி வாக்கே யீவா யரும்பெறற் கோதை யன்னே. (௨)

13 தேவர் புகழுந் திருவரங் கேசன் செவிக்கமுதா
யோவறு மோசைசெ யுன்றாட் சிலம்பென வோங்கெழிற்சீர்
பாவரு நாதம் பயில்வாக்குண் டாகும் படியருள்வாய்
கோவளர் வில்லிபுத் தூர்க்கோதை சூடிக் கொடுத்தவளே. (௩)

14 கண்ணன் செவிக்கினிமை காட்டுனது காற்சிலம்பின்
பண்ணமையு மோசையினிற் பல்லணிகொண் - டெண்ணறுநின்
சீரெலா மோதவருள் செய்வாய் திருக்கோதை
யேருலா மின்னே யெனக்கு. (௪)

𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌨𑍍𑌵𑌯𑍇𑌨 𑌦𑌧𑌤𑍀𑌂 𑌯𑌮𑍁𑌨𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌂
𑌤𑍀𑌰𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌥𑌾𑌵𑌦𑌵𑌗𑌾𑌹𑍍𑌯 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀𑌂 𑌤𑍇 ।
𑌗𑍋𑌦𑍇 𑌵𑌿𑌕𑌸𑍍𑌵𑌰𑌧𑌿𑌯𑌾𑌂 𑌭𑌵𑌤𑍀𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌵𑌾𑌚𑌃 𑌸𑍍𑌫𑍁𑌰𑌨𑍍𑌤𑌿 𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑌮𑍁𑌚𑌃 𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 ॥ ॥ ௪ ॥

15 விடப்பணியி னடனமிடுங் கரிய கோல
மெய்ப்பரம னுடலினால் வெய்யோ னீன்ற
தடக்கருங்கட் டிருநிகரு னமுத தாரைச்
சரச்சுவதி குருமுகமாய்த் தான்கொண் டாடிக்
கடிக்குவளை புரையுனது கடைக்க ணோக்காற்
கனிந்துநலந் தருமினிய கவிபெய் வாரால்
சுடர்க்கொடிபோற் றுளசிவனந் தோன்றுந் தோகாய்
சுரும்பிமிரும் பரிமளப்பூந் தொடையன் னாளே. (௧)

16 நந்தன் மதலை யாடலினால் யமுனை நிகரு நினதுமறை
யந்த மென்னும் வாணிவழி யறிந்தே யாடு மறிவருக்குச்
சந்த மதுர வாக்கமையுந்தகையுன் கடைக்கண் பார்வையன்றோ
கந்த மலர்ப்பூம் பொழிற்புதுவைக் கனியேயருட்பூங் கற்பகமே.

17 காமரு கோவல னானுநி னுடலிற் காமுறலால்
யாமுனை நேருநின் வாணியை நான்முறை யாடல்செய்தோர்
தோமற நின்றுதி சொல்லுவ ரான்மதி தோய்குடுமி
மாமதில் சூழ்வில்லி புத்தூ ருறையு மணிவிளக்கே. (௩)

18 யாதவர்கோ னுடலினான் யாமுனையை நேருனது
நாதவிசை வாணிதனை நன்முறையா—யோதியளைந்
தாடுவோர் கோதா யதிமதுர நாற்கவிகள்
பாடுவா ராவர்சுயம் பா. (௪)

𑌅𑌸𑍍𑌮𑌾𑌦𑍃𑌶𑌾𑌮𑌪𑌕𑍃𑌤𑍌 𑌚𑌿𑌰𑌦𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌨𑌾𑌂
𑌅𑌹𑍍𑌨𑌾𑌯 𑌦𑍇𑌵𑌿 𑌦𑌯𑌤𑍇 𑌯𑌦𑌸𑍌 𑌮𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑌃 ।
𑌤𑌨𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌨𑌿𑌯𑌮𑌿𑌤𑌸𑍍𑌤𑌵 𑌮𑍌𑌲𑌿𑌦𑌾𑌮𑍍𑌨𑌾
𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑌿𑌨𑌾𑌦𑌮𑌧𑍁𑌰𑍈𑌶𑍍𑌚 𑌗𑌿𑌰𑌾𑌂 𑌨𑌿𑌗𑍁𑌮𑍍𑌭𑍈𑌃 । ௫ ।

19 வேலைநெடுங் கடற்றுயிலுங் கரிய கோல
மேகமொப்பா னெனைப்போலும் வெய்யோர் தம்பாற்
சாலநிழ லெனக்கருணை பொழியுந் தன்மை
தனிமதுரத் தமிழ்த்தொடையல் தன்னால் யாத்த
மாலையினு நெறிந்திருண்டு வடித்த கூந்தன்
மாலையினும் பிணிப்புண்ட மால யன்றே
ஆலையெழிற் கரும்பிரசம் பழனம் பாயு
மணிமல்லி நாட்டினுக்கோ ரரசா வாளே. (௧)

20 பரம முதல்வ னெனைப்போலும் படுபா வியருக் கருடரலுன்
வரமன் னியபா மாலையினும் வளருங் குழற்பூ மாலையினும்
விரவு மருளாற் பிணிப்புண்டவிதத்தா லென்பர் வேற்றடங்கட்
புருவ மயிலே புதுவைநகர்ப் பொன்னே கோதைப் பொற்கொடியே.

21 என்போலும் பாவியர்க் கெல்லா மிரங்குத லெம்பெருமான்
மின்போலு நுண்ணிடை வேல்போலுங் கூர்விழி மெல்லியனின்
பொன்போலு நல்லெழிற் பாமாலையினும் புனைகுழற்பூ
மென்போ தினுமுள வேட்கையென் றோதுவர் மேலவரே. (௩)

22 நாறுமலர்க் கோதாயு னுதனெனைப் போலறத்தி
னூறறியா வாதர்க் கருள்புரிதல்—தேறுநின்பா
மாலையினும் வண்குழல்சேர் வாடற் பழஞ்சருகு
மாலையினுங் கொண்ட மயக்கு. (௪)

𑌶𑍋𑌣𑌾𑌽𑌧𑌰𑍇𑌽𑌪𑌿 𑌕𑍁𑌚𑌯𑍋𑌰𑌪𑌿 𑌤𑍁𑌙𑍍𑌗𑌭𑌦𑍍𑌰𑌾
𑌵𑌾𑌚𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌨𑌿𑌵𑌹𑍇𑌽𑌪𑌿 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 𑌤𑍍𑌵𑌮𑍍 ।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑍈𑌰𑌪𑌿 𑌰𑌸𑍈𑌰𑍍𑌵𑌿𑌰𑌜𑌾 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌤𑍍
𑌗𑍋𑌦𑌾𑌽𑌪𑌿 𑌦𑍇𑌵𑌿 𑌕𑌮𑌿𑌤𑍁𑌰𑍍𑌨𑌨𑍁 𑌨𑌰𑍍𑌮𑌦𑌾𑌽𑌸𑌿 ॥ ॥ சூ ॥

23 கருணையொரு வடிவெடுத்த காட்சி போலக்
காதுவரை நீண்டிலகுங் கண்ணு யின்பம்
பருகதரந் தனிற்சோணை நதியாய்த் துங்க
பத்திரையாய்ப் பருத்தபயோ தரத்தாற் பாரின்

மருவியநீர்ப் பிரவாக வாக்கிற் செல்வ
வாணியா யவித்தையிலா வகையின் மன்னும்
விரசையாய்க் கோதையா யாழி கொண்ட
விமலனுக்கு நருமதையாய் விளங்கு வாயே. (க)

24 அன்னையே கோதை யாகி யதரத்திற் சோணை யாகிப்
பன்னருந் தனத்தாற் றுங்க பத்திரை யாகி வாக்கான்
மன்னரும் வாணி யாய்நம் மானுக்கு விரசை யாகி
நன்னர்சால் தரளஞ் சிந்து நருமதா நதியும் போன்றாய். (உ)

25 சேயிதழ்ச் சோணையுஞ் செம்மாந் தெழுந்த திரண்முலையாம்
பாயும் புனற்றுங்க பத்திரை தன்னையும் பாப்பெருக்கான்
மேயவவ் வாணியு மெய்யுரை யாலவ் விரசையும்போ
லாயு நருமதை கோதையு மாயினை யச்சுதற்கே. (ங)

26 சுத்தவிதழ்ச் சோணையினுற் றெய்யிற் றனத்துங்க
பத்திரையாய் வாணிநிறை பாணியாய்—முத்தி
விரசையாய்க் கோதையாய் விண்டுவுக்கே யானுய்
சரசமுறு நர்மதையாய்ச் சார்ந்து. (ச)

[illegible] ॥ ௭ ॥

27 பூமகடன் கலையாகத் துளவம் பூத்த
பொற்கொடிநின் செவியிலொரு புலவன் போந்து
காமருவு சுரகணங்கள் களிப்ப வாதி
காவியமொன் றியம்பியருங் காட்சி பெற்றான்
மாமதுரங் கனிந்தொழுகத் துறைப்பா டேய்ந்து
வளருமிளந் தமிழ்மதுவின் மால்வைத் தாரக்
கோமுதல்வன் றனைப்புரிந்தாய் கோதா யன்பர்
குறைமுடித்தா யிதுவியப்போ கூறுங் காலே. (ரு)

28 தேவியந் கோதா யுன்றன் செவியில்வந் தொருவ ஞதி
காவிய மியற்றி நங்கோன் களிப்புறக் காட்டி ஞறல்
நீவியந் திடுமா சொற்ற நிரையிசைக் கவியா லின்ப
மேவிய காதல் கூரு மென்பதோர் வியப்ப தாமோ. (௨)

29 புவிமா தெனப்புகல் நின்செவி வாய்வந்தொர் புங்கவன்முன்
கவிதா மணிகளை யுங்கோ னருள்பெறக் காட்டினனால்
சவிதா வனைய நம்பூாலம் மாலுளங் தங்கவைத்தாய்
குவிதாமக் கொங்கைக் குயிலே வியப்பென்னை கூறுவதே. (௩)

30 புவிமகளா நின்செவியிற் போந்தமுனி நங்கோன்
கவிமகனைய் வாழ்ந்து களித்தான்—சவிமருவு
நீதா னியற்றுகவி நேசமுற மாலைவைத்தாய்
கோதாய் வியப்பென்னோ கூறு. (௪

𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌂 𑌤𑌵 𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑌮𑌂 𑌭𑌵𑌤𑍀𑌵 𑌗𑍋𑌦𑍇
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌜𑌾𑌂 𑌪𑍍𑌰𑌣𑌯𑌭𑌾𑌵𑌨𑌯𑌾 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌃 ।
𑌉𑌚𑍍𑌚𑌾𑌵𑌚𑍈𑌰𑍍𑌵𑌿𑌰𑌹𑌸𑌙𑍍𑌗𑌮𑌜𑍈𑌰𑍁𑌦𑌨𑍍𑌤𑍈𑌃
𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌗𑍁𑌰𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌾𑌃 ॥ ௮ ॥

31 ஆராத பெருங்காதல் வெள்ளம் பொங்கி
யகப்பொருளின் றுறைதழுவி யன்பு மேவி
வாராத பெருஞ்செல்வ மருவி ஞர்போன்
மாலாகி யனவரத மகிழ்ச்சி கூர்ந்தார்
காராருங் குழற்கோதாய் பெண்மை மேவிக்
காமுறநீ பாடியவக் கவிக டேர்ந்து
நீராகி யுருகுமெனல் வியப்பொன் றில்லை
நீலமுகி லாகுமெனு நிறத்தி ஞனே. (௧)

32 அருள்தருங் குணத்தா லான்றோ ரகப்பொருட் டுறையி ஞடிக்
கருமுகில் வண்ணன் றன்னைக் கலந்தனர் கவிக ளாலே
மருமலர்க் கோதாய் பெண்மை மருவுநின் வாக்கின் மாலா
யுருகிடா துறையுங் கொல்லோ வுரைக்குங்கா லருமை யுண்டோ,

33 மின்போலு நுண்ணிடைக் கோதாயுன் காதலன் மேல்விழைந்து
நின்போற் புலந்து நினைவினிற் கூடிய நேயமெல்லாம்
பொன்போற் கவியிற் புனைந்தளித் தாரது போலவன் பா
லன்பா லளிதரு நின்பாற் புரித லருமையென்னே. (௩)

34 ஆழ்வார்க ளுங்கோ னருளழகிற் பெண்மையவாய்
வாழ்வா ரகங்கனிந்து மால்பெருகி—நாழோரா
மாலாகிக் கோதாயுன் வாக்குமது வுண்டுநின்மான்
மேலாத லென்னோ வியப்பு. (௪)

நாழ்-குற்றம்

மாத꞉ ஸமுத்தி²தவதீமதி⁴விஷ்ணுசித்தம்
விஶ்வோபஜீவ்யமம்ருதம் வசஸா து³ஹாநாம் ।
தாபச்சி²த³ம் ஹிமருசேரிவ மூர்த்திமந்யாம்
ஸந்த꞉ பயோதி⁴து³ஹிது꞉ ஸஹஜாம் விது³ஸ்த்வாம் ॥ ௯ ॥

35 வேதவே தாந்தமெலாம் விளக்குஞ் சோதி
விண்டுசித்த மால்பெறவே விளங்க லானுஞ்
சாதமுறுங் கலையமுதாற் புவிமீ துள்ளோர்
தாபமெலா மகற்றுவிக்குந் தன்மை யாலு
மேதினியில் வேறுமொரு மதியம் போல்வாய்
வியன்கோதை நாயகிநீ வேலை வந்த
சீதமதி யுடனுதித்த திருவி னேடுஞ்
செனித்தசகோ தரியெனவே செப்ப லாமே. (௧)

36 மலைவரும் விண்டு சித்த மால்பெற வந்த தாற்றன்
கலையினாற் றுப நீக்கிக் கழித்தலாற் கருதின் மற்றோர்
தலைதரு மதியம் போலத் தயங்கெழிற் கோதாய் நீதான்
சிலைகடன் மதியோ டுற்ற திருவினுக் கிளையா ளாமே. (௨)

37 மாலா கியவிண்டு சித்தனாற் பாடுற வந்ததின்ற்
பாலார் கலையினில் வெந்தாப நீக்குறும் பண்பின்மற்றோர்
மேலா மதியிற் றிகழ்கோதை யுன்னையவ் வேலைவரும்
ஆலோ னுடன்பிறந் தாட்கிளை யாளென் றறைகுதுமே. (௩)

ஆலோன்—சந்திரன்

38 மன்கலைதேர் விண்டுசித்த மால்பெறவே வந்ததினால்
மன்கலையாற் றுபமெலா மாற்றுவதால்—மென்கலையார்
மற்றோர் மதிநிகர்நீ வார்கடல்வாய் வந்தவள்பின்
புற்றா ளெனவுரைப்பா யோர்ந்து. (ச)

தாதஸ்து தே மதுபித꞉ ஸ்துதிலேஶவஶ்யாத்
கர்ணாம்ருதை꞉ ஸ்துதிஶதைரனவாப்தபூர்வம் ।
த்வந்மௌலிகந்தஸுபகாமுபஹ்ருத்ய மாலாம்
லேபே மஹத்தரபதானுகுணம் ப்ரஸாதம் ॥ ௧௧ ॥

39 மங்காத தவமுனிவர் வான நாட்டு
மலரயனை முதலான வரத்தோர் யாருந்
தங்காதல் பெறத்துதித்தற் கெட்டொ ணாத
தாடாள னினதுதிருத் தாதை சாற்றுஞ்
சிங்காத துதிசிறிதிங் கேற்று வாழ்வு
செய்தருளல் செழுங்கோதைத் திருவே யுன்றன்
கொங்காருங் குழல்சூடிக் கொடுத்த தெய்வக்
கோதைதனை யணிதருமக் குணத்தா லன்றோ. (க)

40 மலரய னாதி வானோர் வாக்கினுக் கெட்டா மாயோன்
அலர்மணிக் கூந்தற் கோதா யனைவினின் றந்தை சாற்றுஞ்
சிலதுதிக் கிரங்கி வாழ்வு செய்தனின் செய்ய சென்னி
மிலைமலர் மாலை வேய்ந்த வேட்கையால் விளைந்த தன்றோ. (உ)

41 நாடிக் கவிஞர் துதித்தற்கெட் டாதனி னாதன்சிற்சில்
பாடித் தரும்பட்டர் கோன்றனக் கேயருள் பாலித்திடல்
கோடித்துக் கோதைக் கொடியே யுனது குழற்கற்றையிற்
சூடித் தருகின்ற மாலையின் மாலெனச் சொல்லுவரே. (௩)

42 மாகர்துதிக் கெட்டா மணவாள னின்றமப்ப
னாகுமவன் பாட்டுக் கருள்புரிதல்—நாகிளம்பூஞ்
சோலைசூழ் வில்லிபுத்தூர்த் தோகாய்நீ சூடியருண்
மாலையா லன்றோ மகிழ்ந்து. (ச)

𑌦𑌿𑌗𑍍𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌪𑌿 𑌪𑌰𑌿𑌪𑌕𑍍𑌤𑍍𑌰𑌿𑌮𑌪𑍁𑌣𑍍𑌯𑌲𑌭𑍍𑌯𑌾𑌤𑍍
𑌸𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌦𑍇𑌵𑌿 𑌤𑌵𑌾𑌵𑌤𑌾𑌰𑌾𑌤𑍍 ।
𑌯𑌤𑍍𑌰𑍈𑌵 𑌰𑌙𑍍𑌗𑌪𑌤𑌿𑌨𑌾 𑌬𑌹𑍁𑌮𑌾𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌂
𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌲𑍁𑌣𑌾𑌪𑌿 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌨𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌾𑌃 । ॥௧௧॥

43 நன்றிசையுந் திருவரங்க நாத னான
நம்பெருமா னீபிறந்த நன்னா டாய
தென்றிசைசெய் திருவிழியின் கடைக்க ணோக்க
மெக்காலு மெய்துதலா லிலவச் செவ்வாய்க்
குன்றிசையுந் தனமலர்ப்பூங் கோதாய் நான்காய்க்
குறித்தபயன் றருதலினாற் கூறுங் காலைத்
தென்றிசையுத் தரதிசையே யாயிற் றென்றாற்
றெரிவருநின் பெருமையெவர் செப்பற் பாலார். (௧)

44 பன்னருங் கோதை நீயுற் பவித்தது பாரின் மீது
தென்னெனத் தெரிந்து நோக்கிச் சீதரன் றுயிற லானு
மன்னரும் பயன்க ணான்கும் வருபவர்க் களித்த லானும்
அன்னபொன் றிசையே நல்லுத் தரதிசை யாயிற் றன்றே. (௨)

45 பேறார்ந்த கோதைப் பிடிநீ யுலகிற் பிறந்ததிசை
வீறா ரரங்க னருணோக் கியைதரு மேன்மையினால்
கூறான நாற்பயன் வேண்டிவந் தோர்க்குக் கொடுத்தலினான்
மாறாகத் தென்றிசை யுத்தர மாக மருவியதே. (௩)

46 பொன்னோக்குங் கோதாய்நீ போந்ததிசை மாலரங்கன்
தன்னோக்க மெய்துந் தரத்தினான் — மன்னோர்க்கு
மண்ணிற் பயனளிக்கும் வண்மையினான் மாமுனிவர்
எண்ணுத் தரதிசையா யிற்று. (௪)

𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌦𑍇𑌵𑌿 𑌭𑌵𑌤𑍀𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌯𑍋𑌗𑌾𑌤𑍍
𑌗𑍋𑌦𑌾𑌵𑌰𑍀 𑌜𑌗𑌦𑌿𑌦𑌂 𑌪𑌯𑌸𑌾 𑌪𑍁𑌨𑍀𑌤𑍇 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌸𑌮𑍇𑌤𑍍𑌯 𑌸𑌮𑌯𑍇𑌷𑍁 𑌚𑌿𑌰𑌂 𑌨𑌿𑌵𑌾𑌸𑌾𑌤𑍍
𑌭𑌾𑌗𑍀𑌰𑌥𑍀𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌯𑍋𑌽𑌪𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌃 ॥ ௧௨ ॥

47 வண்ணமுறு மணிவரன்றி வயங்குங் கோதா
வரியுனது திருப்பெயரை மேவு மாற்றாற்
புண்ணியநன் னதிகளெலாந் தன்பான் மேவப்
புகலரிய பாவமெலாம் போக்கு மன்றி
மண்ணுலகி னீராட வருவோர் கோது
மாற்றிநல னளிக்குமென வகுப்பர் நீலக்
கண்ணனைத்தன் வசமாக்குங் கரிய கோலக்
கருணைவிழிப் பெரியதனக் கனியன் னாளே. (௧)

48 மண்டலம் புகழுங் கோதா வரிநதி யுனது நாமங்
கொண்டதாற் கோதாய் வந்து குளிப்பவர் பாவ மெல்லாம்
சண்டன்மு னிருள்போ லாக்கித் தன்னில்வந் தெய்து நன்னீர்த்
தண்டுறை நதிக ளெல்லாந் தகைபெறச் செய்யு மன்றே. (௨)

49 சாதாரி நேர்மொழிக் கோதா யுனதபி தானங்கொண்ட
கோதா வரிநதி தன்பாற் குளிப்பவர் கோதனைத்தும்
பாதார விந்தம் படுநீர் முதலிய பன்னதியின்
றீதான பாவமுந் தீர்க்குமென் றோதுவர் சீரியரே. (௩)

50 கோதா யுனதுபெயர் கொண்டதனா லன்றோவக்
கோதா வரிதனது கோளகற்றித்—தீதோடச்
சார்ந்தார் பவமுந் தரங்கிணியின் றன்பவமுந்
தீர்ந்தோடச் செய்யுமென்பர் தேர்ந்து. (௪)

நாமைஸ்யஸ்மத் தநோ பக்ஷிராய: க்ஷயம் தே
ஜாதஸ்யம்ஹஸவதீ: பாபாஷ: பாபராண:।
ஸ்நாநம் விப்ராஸ்ஸ்ரீதிதம் புண்யம் ஸ்வத்ர:
ஸம்க்ஷயப்யம் தி பரிஹாஸஸ்ரீரஸ்வீநாம் ॥ ॥ ௧௫ ॥

51 சேலாடைம் புரைவிழியார் சேடி மாருந்
திருவதன நோக்கியருட் செல்வி நங்கோன்
ஆலால வரவணைமேற் றாயின்று னன்றி
யருப்பறவை தனையூர்தி யாகக் கொண்டான்

பாலாய மொழிக்கோதைப் பாவாய் மூத்துப்
பழுத்துமுதிர் கிழவனையுன் பருவந் தேராய்
மாலானா யெனவசதி யாடற் கெல்லா
மட்டடங்காப் புளகூர மகிழ்செய் வாயே. (௧)

52 பாம்பினிற் படுத்தான் வேகப் பறவைவா கனமாய்க் கொண்டான்
மேம்படு கிழவ னானென் வேட்டநின் மகிழ்ந னென்று
தேம்படு தெரியற் கோதாய் சேடிய ரசதி யாடித்
தாம்புகல் வார்த்தைக் கெல்லாந் தனகுட னகைசெய் வாயே.
தனகு—உள்ளக்களிப்பு.

53 கடுத்தா னிகர்விழிக் கோதாயுன் காதலன் கட்செவியிற்
படுத்தா னதன்றிப் பறவையை யூர்ந்தனன் பாரகத்தி
லடுத்தான் கிழவ னெனச்சே டியர்நகைத் தாடுமொழி
மடுத்தே செவியி லடங்கா மகிழ்ச்சியுண் மன்னுவையே. (௩)

54 பணியிற் படுத்தான் பறவைதனை யூர்ந்தான்
அணியிற் றிகழ்கிழவ னன்பன்—மணியிற்பூஞ்
சேடுலவுங் கோதையெனச் சேடியர்கண் மெல்லநகைத்
தாடுமொழிக் குள்ளமகிழ் வாய். (௪)

𑌤𑍍𑌵𑌦𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑌮𑌾𑌲𑍍𑌯𑌸𑍁𑌰𑌭𑍀𑌕𑍃𑌤𑌚𑌾𑌰𑍁𑌮𑍌𑌲𑍇𑌃
𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌭𑍁𑌜𑌾𑌨𑍍𑌤𑌰𑌗𑌤𑌾𑌮𑌪𑌿 𑌵𑍈𑌜𑌯𑌂𑌤𑍀𑌂 ।
𑌪𑌤𑍍𑌯𑍁𑌸𑍍𑌤𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌿 𑌮𑌿𑌥𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌘𑌾𑌤𑌲𑍋𑌭𑌾𑌤𑍍
𑌬𑌰𑍍𑌹𑌾𑌤𑌪𑌤𑍍𑌰𑌰𑍁𑌚𑌿𑌮𑌾𑌰𑌚𑌯𑌂𑌤𑌿 𑌭𑍃𑌂𑌗𑌾𑌃 । ।௧௪।

55 எனைத்துலகும் புகழ்கோதா யிறைவ னாகத்
தெழில்செய்வன மாலையிடை யிசையார் வண்டின்
வனத்தொகுதி நினதுகுழல் சூடித் தந்த
மாலையின்மா லாகியவன் மகுட மீதி
வினத்தினெடுஞ் சுழன்றுநெருக் குதலா லூன்ற
னிருவிழியின் கடையருளைக் கிணைந்தோ ரம்ம
அனைத்துலகு மயிற்பீலிக் கவிகை நீழ
லரசாட்சி புரிவரென வறைவ தாமே. (௧)

56 பருந்துறழ் கோதை நங்கோன் மார்பணி மாலை நீத்துன்
கருங்குழற் கற்றை சூடிக் களைந்ததார் முடியிற் சூழ்ந்த
சுரும்பர்நி னருளைக் குற்றோர் தொங்கலங் கவிகை நீழல்
இருந்தர சாட்சி செய்வ ரென்பதை யுணர்த்து மாதோ. (௨)

57 சுரும்பர்கள் கோதை பிரானிறங் குல்லை துறந்துமன்றற்
கருங்குழல் சூடிச் சுருந்தார் முடியிற் கஞன்றுசுலாய்
உரந்தரச் சூழ்த னின்னருளைக்க முடையவர்மண்
தரம்பயில் பீலிக் குடைநிழ லாள்வது சாற்றுமன்றே. (௩)

58 வண்டினமான் மார்பின் வனமாலை கைவிட்டு
மண்டிநீ சூடியருண் மாலைமுடி—யண்டி
யடையச் சுழலுதனி னன்புடையோர் பீலிக்
குடைநிழலி லாள்தல்குறிக் கும். (௪)

ஆமோதவத்யபி ஸதா ஹ்ருதயங்கமாபி
ராகாந்விதாபி லலிதாபி குணோத்தராபி ।
மௌலிஸ்ரஜா தவ முகுந்தகிரீடபாஜா
கோதே பவத்யதரிதா கலு வைஜயந்தீ ॥ ॥ ௧௫ ॥

59 வன்னநிறத் திருத்துளவ மாலை மாயோன்
மார்பகத்துப் பலநாளு மருவி வாச
மன்னுமெழின் மென்மையொடு தண்மை நாகு
வளங்கயிற்றாற் றொடையலுறு மாண்ப தேனு
நின்னளகந் தனிற்புனைந்து களைந்து தந்த
நிமலமலர் மாலைமுடி மேல தாகக்
கன்னன்மொழிக் கற்பகப்பூங் கோதாய் கீழ்மை
கலந்ததென்பர் கற்றுணர்ந்த கலைவல் லோரே. (௧)

60 வலந்தரு கோதா யன்பன் மார்பணி துளவ மாலை
நலந்தருந் தண்மை மென்மை நார்புனை மணத்த தேனு
மிலைந்துநீ யளகந் தந்த வெறிமலர் மாலை மேலோன்
குலம்பெறு முடிமே லாகிக் குலாயது கூறுங் காலே. (௨)

61 வண்ணங் குணமண மென்மையி னூர்வன மாலைநங் கோன்
றண்ணந் தருநிறஞ் சார்ந்தானு நின்குழல் சாந்தியருள்
பண்ணும் பரிமளப் பூமாலை யன்பர் பணிமுடிமேல்
நண்ணும் பெருமை யுடைத்தா யிருந்தது நாயகியே. (௫)

62 மல்லிகா டாளு மயிலே வனமாலை
மெல்லியலு நன்மணமு மேவுகினும்— அல்லனையான்
வேலைநிகர் மார்பமுற வேய்ந்தளக நீதரும்பொன்
மாலைமுடி மன்னியதம் மா. (௬)

𑌤𑍍𑌵𑌨𑍍𑌮𑍌𑌳𑌿𑌦𑌾𑌮𑌨𑌿 𑌵𑌿𑌭𑍋𑌶𑍍𑌶𑌿𑌰𑌸𑌾 𑌗𑍃𑌹𑍀𑌤𑍇
𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌸𑌪𑍀𑌤𑌿𑌰𑌸𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑌾𑌃 ।
𑌮𑌂𑌜𑍁𑌸𑍍𑌵𑌨𑌾 𑌮𑌧𑍁𑌲𑌿𑌹𑍋 𑌵𑌿𑌦𑌧𑍁𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌤𑍇
𑌸𑍍𑌵𑌾𑌯𑌂𑌵𑌰𑌂 𑌕𑌮𑌪𑌿 𑌮𑌂𑌗𑌳𑌤𑍂𑌰𑍍𑌯𑌘𑍋𑌷𑌂 । ॥ கசு ॥

63 உலகமெலாம் படைத்தளிக்கு மேக நாத
னுருவமுடி தனிற்புனையு முனது கூந்தன்
மலர்கமழு மாலையினின் மொய்த்துத் தேறன்
மடுத்தருந்துங் களிமயக்கால் வண்ட ரீட்டம்
குலவுமிசை தருமுழக்கங் கருணை வாரி
கொழிக்குமிரு கயற்கணறுங் கோதா யுன்றன்
வலமருவும் வதுவைபுரி காலஞ் சேரு
மங்கலவாத் தியமுழக்க மானு மாதோ. (௧)

64 தென்றலிற் றிரியுங் கோதாய் சீதரன் முடிமேற் சூடும்
பொன்றரு மாலை யுன்றன் புரிகுழல் வாசஞ் சார்ந்த
தென்றுமொய்த் தளியின் கூட்ட மிசைதரு முழக்க நின்சீர்
மன்றலுக் கியைந்த மேள வாத்திய நிகர்க்கு மாதோ. (௨)

65 பண்வா ளரவணை மாயோ னணிதரும் பைந்தொடையல்
குணம்வாய்ந்த கோதைநின் குந்தளஞ் சூடிக் கொடுத்ததெனு
முணர்வா யளியினம் பல்லிசை பாடி யொலித்தலுன்றன்
மணம்வாய் பொழுதிசை மங்கல வாத்திய மானுமன்றே. (௩)

66 மாலாகி மாலணிதல் வண்கோதாய் வண்டினங்கள்
மாலா முனது குழல்வனைந்த—மாலையெனச்
சீர்த்தவிசை செய்தல் திருவேஙின் மன்றலிசை
வாத்தியத்தி னன்முழக்க மாம். (௪)

**𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌯𑌮𑌾𑌨𑌰𑌜𑌸𑌾 𑌕𑌮𑌲𑍇𑌨 𑌨𑌾𑌭𑍌**
**𑌵𑌕𑍍𑌷𑌃𑌸𑍍𑌥𑌲𑍇 𑌚 𑌕𑌮𑌲𑌾𑌸𑍍𑌤𑌨𑌚𑌨𑍍𑌦𑌨𑍇𑌨 ।**
**𑌆𑌮𑍋𑌦𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨𑌿𑌗𑌮𑍈𑌰𑍍𑌵𑌿𑌭𑍁𑌰𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑍍𑌮𑍇**
**𑌧𑌤𑍍𑌤𑍇 𑌨𑌤𑍇𑌨 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌤𑌵 𑌮𑍌𑌲𑌿𑌮𑌾𑌲𑌾𑌮𑍍 ।** ॥ ௧௭ ॥

67 வாமனனு யுலகளந்த மாயோ னுந்தி
வனசமலர் வாசனையின் மதனன் மானுங்
காமருபூந் திருமருவு மகலஞ் சாத்துங்
களபநறு வாசனையிற் கங்கை பூத்த
மாமலர்த்தா ளிடைநாளு மருவும் வேத
வாசனையிற் கோதாய்நீ வனைந்து தந்த
தாமமணி மாலிகையே யதிக வாசந்
தருவதெனத் தலையின்மிசைத் தாங்கி னுனே. (௧)

68 மாதவ னுந்தி யந்தா மரைநறு மணத்திற் கோதாய்
காதல்செ யகலஞ் சாத்துங் களபவா சனையிற் கால்சேர்
வேதவா சனையின் மற்றுன் வியன்குழன் மிலைந்து தந்த
தாதவிழ் மாலை தாங்கித் தயங்கினன் றலைவன் றனே. (௨)

69 மாரற்குத் தாதைத னுந்தியந் தாமரை வாசனையில்
தாருற்ற மார்பக் களபத்தண் வாசனை தன்னிலடி
யாரத் திருமறை வாசனை தன்னிலன் பாரணங்குன்
பாரக் குழலணி நல்வாச மென்னப் பரித்திடுமே. (௩)

70 மாலுந்தி யந்தா மரைமணத்தின் மன்னகலஞ்
சாலுங் களபத் தனிமணத்தின்—காலடிசேர்
கோல மறைமணத்திற் கோதாயுன் குந்தளஞ்சேர்
மாலையன்றோ மேலா மணம். (௪)

சூடாபதேந பரிக்ருஹ்ய தவோத்தரீயம்
மாலாமபி த்வதலகைரதிவாஸ்ய தத்தாம் ।
ப்ராயேண ரங்கபதிரேஷ பிபர்தி கோதே
ஸௌபாக்யஸம்பதபிஷேகமஹாதிகாரம் ॥ ॥ கஅ ॥

71 செய்யதிருப் பாற்கடலிற் றுயின்றா வான்றோய்
சிகரநெடுஞ் சோலைமலைத் திகழ்ந்து தோன்றி
வையமெலாங் குறைதீர வானோர் வாழ
வடதிருவேங் கடமருவி மன்னு மாநீர்ப்
பையரவிற் றுயில்புரியு மரங்க நாதன்
பாவையருள் கோதாயுன் பாரக் கொங்கைத்
துய்யதுகில் தன்னுடனீ சூடித் தந்த
தொங்கல்தனை முடிசூடித் துலங்கு வானே. (க)

72 வார்கடற் றுயின்று சோலை மலையிடை யுறைந்து நாகப்
பேர்வரை நின்ற பெம்மான் பிறைநுதற் கோதாய் நின்சீர்
வார்முலைத் தூசு மைம்பால் வனைதரு சரமும் வாங்கித்
தார்முடி சூடி யன்றோ சவிபெறத் தயங்கி னானே. (உ)

73 வங்கக் கடலிற் றுயின்றிருஞ் சோலை மலையுறைந்து
துங்கப் பணிமலை நின்றோனற் கோதையுன் றூயமணிக்
கொங்கைக் கலிங்கமுங் கூந்தலிற் சூடிக் கொடுத்தமலர்த்
தொங்கற் சரமு முடிமேற் றரித்துத் துலங்கினனே. (ங)

74 பாலார் கடற்றுயின்று பாரநெடுஞ் சோலைமலை
மேலாகி வேங்கடத்து மேவியே—மாலானோன்
சேட்டு முலைக்கலிங்கஞ் செல்வியுன வைம்பாற்பொன்
சூட்டணிந்து மேன்மையுறுந் தொட்டு. (ச)

கலிங்கந்தொட்டு மேன்மையுறும் எனக் கூட்டுக.

துங்கைரக்ருத்ரிமகிர: ஸ்வயமுத்தமாங்கை:
யம் ஸர்வகந்த இதி ஸாதரமுத்வஹந்தி ।
ஆமோதமந்யமதிகச்சதி மாலிகாபி:
ஸோऽபி த்வதீயகுடிலாலகவாஸிதாபி: ॥ ॥ க௯ ॥

75 செய்யாத திருமொழியா யநாதி யாகித்
தெரிவரிதாய்ச் சத்தியமாய்த் திரிகா லத்தும்
பொய்யாத மறைகளெலாம் புகழ்ந்து போற்றிப்
பூரணமாங் கந்தனெனப் புகல்வ தெந்த
மெய்யாளன் றனையந்த மேலோன் றானே
வெறிந்துகடை குழைந்திருண்ட விலோதம் வேய்ந்த
நையாத கோதைதனைக் கோதை நங்காய்
நறையுடைத்தா மெனப்புனைந்து நலம்பெற் றானே. (க)

விலோதம்—கொடி.

76 அந்தமின் மறைக ளெல்லாம் யாரையே சருவ மூல
கந்தனென் றுரைக்கு மந்தக் கடவுளு னளகஞ் சூடும்
பைந்துண ரணியைக் கோதாய் பரிமள முடைத்தா மென்னச்
சிந்தனை புரிந்து தன்பொற் சிரத்திடைத் தரிப்ப னன்றே. ()

77 மாசற்று வேத வருக்கமெ லாமெந்த மாறனைநல்
வாசனை யானெனப் பேசிடு மாலந்த மாதவனே
பூசுரர் போற்றிசெய் கோதாயுன் கூந்தல் புனைந்துதந்த
ஆசறு மாலைநல் வாசனை யாமென் றணிகுவனே. (ங)

78 தேசுறுநி னண்பன் றிருவே திகழ்சருவ
வாசனையா னென்று மறையோத—மாசறநீ
சூடிக் களைந்தமலர்த் தொங்கன்மிகு கந்தமெனக்
கோடிக்குந் தன்முடிமேற் கொண்டு. (ச)

யத்ந்யஸஹஜக்ஜகதாம் விகாராத்தாம்ஸே
த்வந்நளஷிரோவ்யவஸம்ஹாரணெநமாலிபம் ।
ஐம்பீவரஸ்ஜிவாஷயகித்வீயா
ந்யாகேகுராணிவெஷமாரோநவிஜெலாகிதாநி ॥ ௨௰ ॥

79 முருகுயிர்க்குஞ் செழுங்கமலத் தன்னப் பேடை
முனிந்தூடச் சேவலன முகமன் கூறி
யருகிருக்கும் புனற்பொன்னி யரங்கன் வேய்ந்த
வமலமலர்க் கோதாயு னளகஞ் சூடித்

தருவிருப்ப மணிமாலை குழைக டோய்ந்து
சகரர்நெடுங் கடல்புரையச் சவிசே ருன்ற
னிருகயற்கட் கடைநோக்க மெய்த லாலே
யெழிற்குவளை மாலையென விலங்கு மாலோ. (௧)

80 பத்திரச் சுவாலை யாழிப் படையவன் முடியில் வேய்ந்த
வித்தகக் கோதாய் கூந்தன் மிலைந்துநீ யருளு மாலை
சித்திரக் கடைக்கணோக்காற் செறியிதழ்க் குவளை மாலை
யொத்துநன் கொளிரு மன்றி யுவமையெ னுரைக்கற் பாற்றே.

81 நாவியங் கோதையிற் சூடிக் களைந்துநி னுதன்முடி
மேவிய வேரி மலர்மாலை யாவி வியன்புதுவை
யாவியன் னாயுன் கடைவிழி நோக்க மமைதலினாற்
காவியம் போதினிற் கட்டிய மாலை கடுக்குமன்றே. (௫)

82 நாடுபுகழ் வில்லிபுத்தூர் நங்காயு னுதன்முடி
சூடித் தரப்புனைந்த தொங்கலந்தார்—நீடியபொன்
மாவடுநேர் கட்பார்வை மன்னுதலால் வாய்மலர்ந்த
காவிமலர் மாலையொக்குங் காண். (௪)

**ரங்கேஶ்வரஸ்ய தவ ச ப்ரணயாநுபந்தா**
**அந்யோந்யமால்யபரிவ்ருத்திமபிஷ்டுவந்த: ।**
**வாசாலயந்தி வஸுதே ரஸிகாஸ்த்ரிலோகீம்**
**ந்யூநாதிகத்வஸமதாவிஷயைர்விவாதை: ॥ ௨௧ ॥**

83 தேற்றமுறுந் தரளமணி கொழிக்குந் தெண்ணீர்த்
திருவரங்கப் பெருமனுடன் சேர்ந்து செவ்வாய்க்
கோற்றொடியஞ் சனவிழிப்பூ ணலங்கற் கோதாய்
கொடியிடையாய் நீயெதிர்ந்து சூடி மாலை
மாற்றுவதி லிவரிலெவர் பெரிய ரென்று
மதிநாடித் துதிகூறி வானோ ராதி
நாற்றிசையோ ரெடுத்துரைக்கும் வாதப் பாட்டி
னவின்முழக்கங் கடலொலியாய் நவிற்ற லாமே. (௧)

84 தாற்றிளங் கமுக வேலித் தண்பணை வில்லி புத்தூர்க்
கோற்றொடி யுனது கோலக் கொழுநனோ டுவந்து மாலை
மாற்றலா லிவரில் யாவர் வலியவ ரென்று வாதம்
ஆற்றுறு மொலியவ் வாரி யதற்கிணை யறைய லாமே. (௨

85 குணமாலை சேரெழிற் கோதா யுனது கொழுநனொடு
மணமாலை மாற்றலி னின்னோரில் யாவர் வலியரெனப்
பணமாலை யம்புவி யுள்ளோர்கள் வாதம் பகருரைகள்
கணமாலை யொண்டிரைக் கார்க்கடல் போலக் கலித்திடுமே. (௫)

86 தென்னரங்கன் றன்னொடுநீ சேர்ந்து திருக்கோதாய்
மன்னு மணமாலை மாற்றுங்காற் — பன்னறிஞர்
நும்மி லெவர்பெரியோ ரென்று நுவல் வாதவுரை
விம்முகட லென்ன மிகும். (௪

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥ ௨௨ ॥

87 ஒருமருங்கி னுறையமுதச் சாயன் மேனி
யொண்கமலை தனதுருப்பொ னொளியு மற்றோர்
திருமருங்கி னுறைகோதைத் தெரிவை நல்லாய்
திகழுனது மரகதப்பூந் தெய்வத் தேசும்
இருமருங்கும் படர்ந்தேறி யொன்றாய்க் கூடி
யிலங்குதலா னுமதிடையி லிருக்கு மெங்கள்
குருவரங்கன் றிருமேனி பீலிச் செவ்விக்
குலமயிலி னெருத்தெனவே குலவுமாலோ. (௧)

88 பொன்னிறத் திருவும் பச்சை புரைநிறத் திருவு மான
வன்னையங் கோதாய் நீயு மமர்தலா லரங்க நாத
னென்னுமெம் பெருமான் கோல[illegible]ான்
மன்னிய வெழிலார் தோகை [illegible]ருத துறமு மா[illegible]

89 வலப்பாற்பொன் வண்ணத் திருமாது மற்றொரு பாலிற்பச்சை
கலப்பா மரகத சோபைகொ ணீயுங் கலத்தலினால்
குலப்பா டுடையநற் கோதாய் சகல குணசம்பனன்
நலப்பா டுடைய மயிலெருத் தாரொளி நண்ணுவனே. (௩)

90 புட்பந் தனிலுறையும் பொன்னொளிசேர் பூமாது
நிட்களங்கப் பச்சையொளி நீயுமாய்—நட்பின்
இருபாலும் வைகுதலா லெம்மோய்மான் மஞ்ஞைத்
திருவா ரெருத்துறழுஞ் சேர்ந்து. (௪)

அர்சாம் ஸமர்ச்ய நியமைர்நிகமப்ரஸூநை:
நாதம் த்வயா கமலயா ச ஸமேயிவாம்ஸம் ।
மாதஶ்சிரம் நிரவிஶந்நிஜமாதிராஜ்யம்
மாந்யா மநுப்ரப்ருதயோऽபி மஹீக்ஷிதஸ்தே ॥ ௨௩ ॥

91 பூந்தாது முருகுயிர்க்குங் கமுக வேலிப்
பொன்மதில்சூ ழயோத்திநகர் புரந்த சீர்த்தி
மாந்தாதா முதலிக்கு வாகு வாதி
மன்னவர்தம் மாளிகையில் வைகல் தோறுந்
தீந்தேறன் மொழிக்கோதை நங்கா யிந்தத்
திருவரங்க நாதனைப்பொற் றிருவோ டுன்னைத்
தாந்தாஞ்செய் பூசனையா லன்றோ வேக
சக்ராதி பதியாகித் தரம்பெற் றாரே. (௧)

92 மாதலம் புகழு மிக்கு வாகுமாந் தாதா வாதி
ஆதவ குலத்தோ ரெங்க ளரங்கனை யயோத்தி தன்னில்
கோதையத் திருவோ டுன்னைக் குறித்தருச் சனைசெய் தன்றோ
வாதனத் திருந்து மங்கா தாழியொன் றுருட்டி னாரே. (௨)

93 நாகா திபர்புகழ் கோதா யயோத்தி நகரிலிக்கு
வாகாதி மன்னவர் மாலரங் கேசனை மாவொடுன்னை
மாகாத லோடும் வழிபாடு செய்த மகிமையன்றோ
ஏகாதி பத்திய மன்னவ ராகி யிருந்ததுவே. (௩)

94 அன்ன வயல்சூ ழயோத்தி நகராளு
மன்னரிக்கு வாகுமுதன் மாந்தாதா—பொன்னை
யரிந்தமனைக் கோதையுனை யன்பாகப் பூசை
புரிந்தன்றோ பெற்றார் புகழ். (௪)

𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌪𑌰𑌾𑌧𑌿𑌨𑌿 𑌜𑌨𑍇𑌽𑌪𑍍𑌯𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌂
𑌰𑌂𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌰𑌮𑌯𑌾 𑌵𑌿𑌨𑌿𑌵𑍇𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 ।
𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 𑌪𑌰𑌤𑍍𑌰 𑌭𑌵𑌤𑍀 𑌯𑌦𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌨𑌾𑌸𑍀𑌤𑍍
𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌦𑍇𑌵𑌿 𑌵𑌦𑌨𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । ௨௪ ।

95 மணிமுறுவற் கருநெடுங்கட் பணைத்தோ ணெய்த்து
வார்ந்திருண்ட குழற்கோதை மங்காய் மண்ணிற்
றணிவில்பெருந் தவறிழைத்தோர் தம்பால் வெம்மை
சார்ந்துழியத் தாடாளன் றண்மை சார
அணியமுதத் திருமொழியா லொருபால் வைகும்
அருட்கமலை பொறுத்தருளென் றறையுங் காலைப்
பணிதரநீ மணிமுறுவல் பூத்து வாம
பாகமிலை யெனிற்சீர்மை படைப்பார் கொல்லோ. (க)

96 தாங்கரும் பாவஞ் செய்து சரணடைந் தோரைக் காவென்
றாங்கருள் வலப்பா டுற்ற வன்னைவேண் டிடவு மன்பு
நீங்கினை யின்றி வாம நீயிருந் திலையேற் கோதாய்
பாங்குறுஞ் சீர்மை யின்னும் படைப்பரோ பார்க்குங்காலே. ()

97 வன்பவஞ் செய்து சரணா கதியென வந்தடைந்தோர்க்
கன்புட னாகி வலப்பா லிருந்துபொ னாற்றுகவென்
றின்புறச் சொற்றிட நீவாம பாகத் திருந்திலையேன்
மண்பெறும் வில்லிபுத் தூர்க்கோதை யெங்ஙனம் வாழுவரே.

98 சாலத் தவறிழைத்தோர் சார்ந்துசர ணென்றுரைப்ப
மாலுக் கருகு வலப்புறமாய்க்—கோலப்பொன்
மாற்றுகெனக் கோதாய்நீ வாமபா கத்திலையே
லேற்றமிவர்க் கென்று மிலை. (௪)

𑌗𑍋𑌦𑍇𑌗𑍁𑌣𑍈𑌰𑌪𑌨𑌯𑌨𑍍 𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌪𑌰𑌾𑌧𑌾𑌨𑍍
𑌭𑍍𑌰𑍂𑌕𑍍𑌷𑍇𑌪 𑌏𑌵 𑌤𑌵 𑌭𑍋𑌗𑌰𑌸𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑌃 ।
𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌿𑌫𑌲𑌦𑌾𑌨𑌰𑌤𑌸𑍍𑌯 𑌭𑌰𑍍𑌤𑍁𑌃
𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌦𑍁𑌰𑍍𑌵𑍍𑌯𑌸𑌨𑌮𑌰𑍍𑌮𑌭𑌿𑌦𑌾𑌨𑌿𑌦𑌾𑌨𑌂 ॥ ॥ ௨௫ ॥

99 அறத்தோடு மறமல்லா தாற்றி னோர்கட்
கவ்வினைகட் கிடாக வமைய நோக்கித்
திறத்தோடு நினதருட்கட் டுணைவ னான
திருவரங்கன் பணித்தருளுஞ் சேமத் தோடு
மறத்தோடு துக்கமெலாங் கதிர்வாய்ப் பட்ட
மையிருள்போ லாகுமன்றே வருணைப் பச்சை
நிறத்தோடு திகழ்கருணைக் கோதை நங்காய்
நினது நுதல் சிறிதசைந்து நெரிந்தா லன்றே. (௧)

100 இகத்தினி லறத்தோ டன்மைக் கேற்றன வீச னல்குஞ்
சுகத்தொடு துக்க மெல்லாஞ் சுரிகுழற் கருங்கட் டோகாய்
சகத்திடை யெழுமாரத் தாண்டன் றன்முன மிருளே யாநின்
முகத்திடைப் புருவங் கோட்டி முறிந்தசைந் திடலான் மன்னே.

101 புலையார் பவமுந் தருமமுஞ் செய்தப் பொழுதடைந்தோர்க்
கலையார் புனற்பள்ளி கொண்டா னரங்க னளந்தளிக்கு
மலையார் சுகதுக்க மெய்யெதிர் பொய்யென மாறுமன்றே
சிலையார் புருவநற் கோதாய் தளம்புதல் செய்திடினே. (௨)

102 சக்கரஞ்சேர் கையான் சரண்புகுந்தோர் தங்கள்வினை
யொக்க வுணர்ந்திதுவென் றோர்ந்து தவுந்—துக்கசுக
மீரப் பனிமலர்க்க ணெம்மோ யிரிந்திடுமுன்
பூருச் சிலைவளைந்த போது. (௩)

𑌰𑌂𑌗𑍇 𑌤𑌟𑌿𑌦𑍍𑌗𑍁𑌣𑌵𑌤𑍋 𑌰𑌮𑌯𑍈𑌵 𑌗𑍋𑌦𑍇
𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌂𑌬𑍁𑌦𑌸𑍍𑌯 𑌘𑌟𑌿𑌤𑌾𑌂 𑌕𑍃𑌪𑌯𑌾𑌸𑍁𑌵𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 ।
𑌦𑍌𑌰𑍍𑌗𑌤𑍍𑌯𑌦𑍁𑌰𑍍𑌵𑌿𑌷𑌵𑌿𑌨𑌾𑌶𑌸𑍁𑌧𑌾𑌨𑌦𑍀𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂
𑌸𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯 𑌶𑌮𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌚𑌿𑌰𑍇𑌣 𑌤𑌾𑌪𑌾𑌨𑍍 ॥ ॥ ௨௬ ॥

103 நெறிந்திருண்டு சுருண்டுகடை குழன்று வார்ந்து
நெய்த்தறனோர் குழற்கோதா நிதியே நீண்டு
மறிந்தநின தருணோக்க மதனா லன்றோ
மதியுடையோர் கதியான வாளை தாவிச்
செறிந்தமணிக் கமுகமடல் கிழிக்குந் தெண்ணீர்த்
திருவரங்கத் தொருமேகஞ் செம்பை யோடு
முறைந்ததெனத் திருவினொடு முறைவோன் றாப
மொருமூன்று மகற்றவுயர்ந் தோங்கு வாரே. (௧)

104 மின்னிய திருவி னோடு மேவிய மேக மன்னான்
றன்னடி யார்கண் மூன்று தாபமு மகற்றி யாள்தல்
மன்னரும் வில்லி புத்தூர் வருந்தரு வனைய கோதாய்
நின்னருட் கடைக்க ணோக்க மெய்திய நீர்மை யன்றோ. (௨)

105 மின்னார் தடமதில் வில்லிபுத் தூர்வரும் வேயர்குலப்
பொன்னே யுனதருள் கொண்டல்ல வோகஞ்சம் பூத்தலர்ந்த
முன்னாக மென்னத் திருவோ டுறையு முதல்வனெங்கோன்
மன்னா ரடியவர் முத்தாபக் கோதற மாற்றுவதே. (௩)

106 மின்னனைய பூவையொடு மேகமென வீற்றிருக்குந்
தென்னரங்கன் தன்னடியார் சேமமுறத்—துன்னியமுத்
தாபமெலா மாற்றல் தடங்கோதாய் நீநோக்கு
மாபலத்தா லன்றோ மகிழ்ந்து. (௪)

ஜாதாபராதமபி மாமநுகம்ப்ய கோதே
கோப்த்ரீ யதி த்வமஸி யுக்தமிதம் பவத்யா: ।
வாத்ஸல்ய நிர்பரதயா ஜநநீ குமாரம்
ஸ்தந்யேந வர்தயதி தஷ்டபயோதராபி ॥ ॥ ௨௭ ॥

107 புரிந்தேறி யியற்கைமணம் பொருந்தித் தெய்வப்
புழுகளைந்து நீண்டகுழற் பொன்னே கோதாய்
பரிந்தாரப் பால்பருகும் பாலன் றாயார்
பயோதரத்தைக் கடித்துவிடிற் பாச நீங்கிக்

கரிந்தேற முனிந்துருத்துக் கடிவ தாகக்
கண்டதுண்டோ காசினியி லதுபோ ளுயேன்
தெரிந்தேனுந் தெரியாம லேனுஞ் செய்த
தீங்கனைத்தும் பொறுத்தருணீ செய்கு வாயே. (க)

108 நால்வகைப் பயனும் நல்கும் நங்கடங் கோதாய் பிள்ளை
பால்குடித் திடுங்கால் வண்ணப் பயோதரங் கடித்தா லன்னை
மாலற முனிவாள் கொல்லோ மற்றது போல நாயேன்
சீலமற் றறிந்து செய்த தீவினை தீர்த்தாள் வாயே. (உ)

109 விரிந்தடர் பூம்பொழில் வில்லிபுத் தூர்வரு மெல்லியல்பால்
அருந்துறு பாலன் றனங்கடித் தாலஃ தன்னையறிந்
திருந்தறச் சீறிக் கடிவள்கொல் லோநலஞ் செய்தறியேன்
தெரிந்தறி யாமற் புரிந்தவெப் பாவமுந் தீர்த்தருளே. (ங)

110 தெளிந்துந் தெளியாதுஞ் செய்தபிழை யெல்லாங்
களங்கமறக் கோதாய் களைவாய்—பளிங்கனபால்
தன்னை யருந்துந் தனங்கடித்தாற் றன்குழந்தை
யன்னை முனியாண்மற் றுங்கு. (ச)

𑌶𑌤𑌮𑌖𑌮𑌣𑌿𑌨𑍀𑌲𑌾 𑌚𑌾𑌰𑍁𑌕𑌲𑍍𑌹𑌾𑌰𑌹𑌸𑍍𑌤𑌾
𑌸𑍍𑌤𑌨𑌭𑌰𑌨𑌮𑌿𑌤𑌾𑌙𑍍𑌗𑍀 𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌾𑌤𑍍𑌸𑌲𑍍𑌯𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌃 ।
𑌅𑌲𑌕𑌵𑌿𑌨𑌿𑌹𑌿𑌤𑌾𑌭𑌿𑌃 𑌸𑍍𑌰𑌗𑍍𑌭𑌿𑌰𑌾𑌕𑍃𑌷𑍍𑌟𑌨𑌾𑌥𑌾
𑌵𑌿𑌲𑌸𑌤𑍁 𑌹𑍃𑌦𑌿 𑌗𑍋𑌦𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 𑌨𑌃 ॥ ௨௯ ॥

111 பொங்கியவிந் திரநீல மணியே போலப்
பொலிநிறமும் புன்னகையும் பொற்பு வாய்ந்த
செங்கழுநீர் மலர்க்கரமும் பணைத்து வீங்கித்
திரண்டதன பாரமதாற் சிறிது வாங்கும்
அங்கமுந்த னடியாருக் கருளூ நாத
னவாவுறுந்தா ரணிகுழலு மாகத் தோன்றும்
எங்கள்குலப் பட்டர்பிரான் மகளாய் வந்த
எழிற் கோதை யிணையடிக ளிறைஞ்சி வாழ்வாம். (க)

112 இந்திர நீலத் தேசு மெருமண மார்ந்த கையும்
வந்தெழு தனத்தாற் சற்று வளாவிய தனுவு மாலோன்
சிந்தனை புரியு மாலை செறிதரு குழலு மாகப்
பந்துரம் பொருந்துங் கோதை பதயுகம் பணிதல் செய்வாம்.
எருமணம்—செங்குவளை.

113 சிற்றுத செங்கு வளையார் கரமுந் திருநெடுமால்
பற்றார் படலையைம் பாலுமஞ் சார்தன பாரமதாற்
சற்றே வணங்கு சரீரமு மாமணி தன்னுருவு
முற்று ளனைத்தையும் பெற்றாள்தண் கோதையெ னுள்ளத்ததே. (௩)

114 மால்விரும்பு மாலை மலர்க்குழலு மாமணிநேர்
மாலுருவுஞ் செங்கு வளைக்கரமுங்—கோலமுலை
வன்பொறையாற் சற்று வளையுடலு மாங்கோதை
தன்சரண நெஞ்சுறையுஞ் சார்ந்து. (௪)

இதி விகஸிதபக்த்யுத்திதாம் வேங்கடேஶாத்
பஹுகுணரமணீயாம் வக்தி கோதாஸ்துதிம் ய: ।
ஸ பவதி பஹுமாந்ய: ஶ்ரீமதோ ரங்கபர்த்து:
சரணகமலஸேவாம் ஶாஶ்வதீமப்யுபைஷ்யந் । ௨௯ ।

115 விரிந்தவட கலைக்கடலை யருந்து மேகம்
வேதாந்த தேசிகன்வாய் மிளிர்ந்து தானாய்
வரும்பெரிய காவியமா மிந்தக் கோதா
மான்மியமன் புடனுடி மனனஞ் செய்தோர்
திருந்துமெழிற் காளமுகில் போலு மெங்கள்
திருவரங்க நாதனருட் செல்வம் வாய்ந்து
மருந்துறமும் பட்டர்பிரான் றன்னைப் போல
மங்காத நலனடைந்து வாழ்வார் மன்னே. (௧)

116 செகதலம் புகழ்வே தாந்த தேசிக னருளிச் செய்த
மகிமைசா லிந்தக் கோதா மான்மிய மதனைக் கற்றோர்
ககபதி யாகி வந்த கழைக்குலக் கவிஞன் போலத்
திகழொளி பொருந்தி யையன் றிருவடி நிழல்சேர் வாரே. (௨)

117 தேனு மிதுவென **வேதாந்த தேசிகன்** செந்துவர்வாய்
தானுய் வருமிந்தக் **கோதா மகான்மியந்** தன்னைக் கற்றோர்
வானும் பட்டர் பிரான்போற் சகல வளமருவி
மானுகங் கார மிலாதகல் வாழ்விடை மன்னுவரே. (௩)

118 மேதினியெல்லாம்புகழும் **வேதாந்த தேசிகன்**சொல்
மாதர் செய்**கோதா மான்மியத்தை**—யாதரவாய்ப்
போற்றினோர் பட்டர்பிரான் போலப் புகழ்மருவி
வீற்றிருப்பர் வைகுந்த மேல். (௪)

[**கோதாஸ்துதி** மொழிபெயர்ப்பு முற்றிற்று.]

---

119 எட்பூவுக் கிகனடி யிந்திரையே
முதனின்னே டியைந்த வுள்ள
நட்பூறு மூவர்தமிழ் கோதையுள் பான்
மயல்பெருகி நச்சினுற்
கட்பூவிற் புவிபுரக்குங் காவலவ
னருச்சனைசெய் கனகப் பூவின்
மட்பூவின் மயலான மால்திருவேங்
கடமலைவாழ் மாயோன் றனே. (௧)

120 சரணபங் கயமுங் கருணையார் விழியுஞ்
சங்கணி மலர்க்கர தலமுங்
கிரணவொண் மணிமா மகுடமும் புதிய
கிளிமொழி மூறுவலும் வயங்கக்
காரணமும் பொறியுங் காயமுங் கலங்கிக்
காலனுங் குறுகிடக் களைத்து
மரணமுற் றிடும்போ துற்றெனை யாள்வாய்
வில்லிபுத்தூர்க் கோதைநா யகியே. (௨)

121 சூந்தீர்த்துப் பொன்கொழித்துத் தரளஞ்சிந்தித்
தலைசாய்த்து வரும்பொன்னித் துறைகடோறும்
பந்தேற்குந் தனமடவார் வதனம்போலப்
பங்கயங்கண் முகமலரு மரங்கந்தன்னுள்
ஐந்தேற்கும் பணைமகுடத் தழகுகாட்டி
மரவணைமேற் கண்வளரு[illegible]
கொந்தேற்கு மலர்மாலை குழலிற்சூடிக்
கொடுத்தாளை யுளங்கமலங் குடி[illegible] (௩)




122 கரியதிரு வடிவுடைய பெரி[illegible]செய்ய
கமலமலர் மீதுபசுங் கமுக[illegible]
சொரியுமிளம் பொழின்மருவும் வில்லிபுத்தூர்த்
தோன்றியருள் கோதாயுன் றாயமன்றற்
குரியபத மகனுமுனந் தோளினேந்தி
யுறுதலினா லன்றோமு னுவந்துநிற்கும்
பெரியதிரு வடிமருங்கு நாளும்வைகப்
பெற்றனனுன் பெருமையெவர் பேசற்பாலார். (௪)

123 ஒருமருப்பி னிடையேந்திப் புவிமகளா
முனைத்திருமா லுவந்த பின்னுங்
குருவிருக்கு மணிமுடியிற் கொண்டுசுமந்
தண்டுமதிக் குடையி னீழல்
தருவிருக்கும் வானவருஞ் சராசரமுங்
களிகூரத் தானே யாண்டுன்
அருகிருக்கு மகலாமற் கோதையெனி
லுனதுபுக ழுரையற் பாற்றோ. (௫)

## கோதாஸ்துதி முற்றிற்று.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகாய நம:

ஸ்ரீமந் மாருதயே நம:

---